16th March 1961]

*Floods in Mangarai and Marudha rivers*

* 862 Q.—SRI M. A. B. ARUMUGHASAMY : கனம் உள்துறை அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) 1960-ம் ஸ்ரீ நவம்பர் மீ 11-ம் தேதி திடீரென்று ஏற்பட்ட வெள்ளத்தினால் திண்டுக்கல் தாலுகா, ஆத்தூர் தொகுதியில் மாங்கரை ஆறு, மருதாநதி இவைகளினால் ஏற்பட்ட பெரும் சேதம் பற்றி மதுரை ஜில்லா உணவு உற்பத்தி என்ஜினீயர் அவர்களுக்கு தந்திமூலம் தெரிவிக்கப்பட்டதா?

(இ) அதன்மீது எடுத்துக்கொண்ட நடவடிக்கை என்ன?

(உ) இவ்விரு ஆறுகளிலும் அடிக்கடி ஏற்படும் பெரும் சேதங்களை நிரந்தரமாகத் தடுத்து நிறுத்த ஏதாவது நடவடிக்கை எடுத்துக்கொள்ளப்படுமா?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : (அ) No, Sir.

(இ) The question does not arise.

(உ) Action is being taken by the Executive Engineer, Madurai, to sanction estimate for closing the breaches in Mangarai river permanently and for construction of training wall. As regards Marudhanadhi, detailed investigation has been carried out for strengthening the out-flanked portion as a permanent measure and for carrying out repairs to the sluices which command direct ayacut under the river and the plans and estimates are under preparation.

SRI M. A. B. ARUMUGHASAMY : ஸார், மாங்கரை ஆற்றிலே வந்த வெள்ளத்தினால் ஏற்பட்ட சேதம் எவ்வளவு? இதை நிரந்தரமாகத் தடுக்க ஏற்படக்கூடிய செலவு என்ன?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : சேதம் எவ்வளவு என்ற புள்ளிவிவரம் என்னிடம் இல்லை. அப்போதே தாற்காலிகமாக மேலும் சேதம் ஆகிவிடாமல் தடுக்கப்பட்டது—ப்ரீச்சஸ் எல்லாம் மூடப்பட்டன. இப்போது எவ்வளவு செலவாகும் என்ற விவரமும் என்னிடம் இல்லை. செலவைப் பற்றி கவலை வேண்டாம். நிரந்தரமாக சேதம் ஏற்படாமல் செய்ய என்னென்ன செய்ய வேண்டுமோ அதெல்லாம் நிறைவேற்றப்படுகின்றன.

SRI M. A. B. ARUMUGHASAMY : மருதா நதியில் ஏற்பட்ட வெள்ளம் காரணமாக விவசாயிகளுக்கு அதிகமாக நஷ்டம் ஏற்பட்டிருக்கிறதே, அந்த நஷ்டத்தை ஈடு செய்ய விவசாயிகளுக்கு ஏதாவது கடன் உதவி செய்யப்படுமா? உதவி கோரி விவசாயிகள் மனுச் செய்தார்களா? அப்படியானால் என்ன நடவடிக்கை எடுக்கப்பட்டது?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : நஷ்டம் ஏற்பட்டால் ஈடு செய்ய கடன் கொடுக்கவேண்டும் என்ற திட்டம் ஒன்றும் இல்லை. கடன் கேட்பவர்களுக்கு பல வழியில் கூட்டுறவு சங்கங்களும் சர்க்காரும் கொடுத்துக்கொண்டுதான் வருகிறார்கள்

[16th March 1961

MR. SPEAKER: We will take up Question Nos. 863, 864 and 865 when the Hon. Minister concerned comes to the House.

*Bus routes (Harijan applicants)*

* 866 Q.—SRI V. K. KOTHANDARAMAN (on behalf of SRI N. MARUDACHALAM) : கனம் மின்சார அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) கோவை ஜில்லாவிலிருந்து கடந்த நான்கு மாதத்தில் பஸ் ரூட்டிற்காக விண்ணப்பித்துள்ள ஹரிஜனங்கள் எத்தனை பேர்?

(இ) எத்தனை பேருக்கு பர்மிட் வழங்கப்பட்டது?

THE HON. SRI V. RAMAIAH: (அ) One.

(இ) Nil.

SRI M. K. SOMASUNDARAM: ஸார், கோவை ஜில்லாவிலே இல்லை என்றாலும் மற்ற இடங்களில் ஹரிஜனங்கள் பஸ் ரூட் வேண்டுமென்று ஏதாவது விண்ணப்பம் போட்டிருக்கிறார்களா? அதைப்பற்றி அரசாங்கம் என்ன பரிசீலனை செய்திருக்கிறது?

MR. SPEAKER: உப கேள்வி கேட்பதாக இருந்தால் கோயம்புத்தூர் ஜில்லாவை பற்றித்தான் கேட்கவேண்டும். இல்லை என்றால் தனிக்கேள்வி போடவேண்டும்.

SRI K. VINAYAKAM: On what grounds was this applicant disqualified to own a bus route?

THE HON. SRI V. RAMAIAH: He did not fulfil the requirements for the issue of a bus permit.

*G.C.I.M. Examination*

* 867 Q.—SRI S. M. ANNAMALAI (on behalf of SRI S. PAKKIRISWAMI PILLAI): Will the Hon. the Minister for Revenue be pleased to state the number of students who passed the G.C.I.M. examination in Ayurveda, Siddha and Unani in the years 1957 to 1960, and the percentage of those who passed the examinations, from the Government College of Integrated Medicines in Kilpauk, Madras?

THE HON. SRI M. A. MANICKAVELU: A statement [a] is placed on the table of the House.

SRI M. K. SOMASUNDARAM: ஸார், மேஜைமேல் வைக்கப்பட்டிருக்கிற குறிப்பிலே பர்ஸெண்டேஜ் குறைவாக இருக்கக் காரணம் என்ன? படிப்பின் தரம் குறைவாக இருக்கிறதா? அதை திருப்தி பண்ண அரசாங்கம் என்ன நடவடிக்கை எடுத்துக் கொண்டிருக்கிறது?

THE HON. SRI M. A. MANICKAVELU: அதை மாணவர்கள் தான் திருப்தி பண்ணவேண்டும். நன்றாகப் படித்து திருப்தி செய்யலாம்.

---

[a] Printed as Appendix I on page 698 infra.